1890

# தாயுமானவ சுவாமிகள்

# திருப்பாடற்றிரட்டு.




உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# தாயுமானசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு.





இஃது

திருமயிலை - வித்வான்

## சண்முகம்பிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு,

பால்குரிகி:



சிவலிங்கையரவர்களது

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

விக்ருதிவருஷ சித்திரைமீ

உ

தணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# தாயுமானசுவாமிகள்பாடல்.

## திருவருள்விலாசப்பரசிவவணக்கம்.

ஆசிரியவிருத்தம்.

அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா
 யானந்தபூர்த்தியாகி
யருளொடுநிறைந்ததெது தன்னருள்வெளிக்குளே
 யகிலாண்டகோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
 தழைத்ததெதுமனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
 தந்தெய்வமெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது
 வெங்கணும்பெருவழக்கா
யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
 யென்றைக்குமுள்ளதெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுள்ளதெதுவது
 கருத்திற்கிசைந்ததுவே
கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
 கருதியஞ்சலிசெய்குவாம். (க)

ஊரனந்தம்பெற்ற பேரனந்தஞ்சுற்று
 முறவனந்தம்வினையினு

ளுடலனந்தஞ்செயும் வினையனந்தங்கருத்
தோவனந்தம்பெற்றபேர்
சீரனந்தஞ்சொர்க்க நரகமுமனந்தநற்
றெய்வமுமனந்தபேதந்
திகழ்கின்றசமயமு மனந்தமதனூன்ஞான
சிற்சத்தியாலுணர்ந்து
காரனந்தங்கோடி வருஷித்ததெனவன்பர்
கண்ணும்விண்ணுந்தேக்கவே
கருதரியவானந்த மழைபொழியுமுகிலைநங்
கடவுளைத்துரியவடிவைப்
பேரனந்தம்பேசி மறையனந்தஞ்சொலும்
பெரியமௌனத்தின்வைப்பைப்
பேசருமனந்தபத ஞானவானந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம்.

அத்துவிதவத்துவைச் சொற்ப்ரகாசத்தனியை
யருமறைகண்முரசறையவே
யறிவினுக்கறிவாகி யானந்தமயமான
வாதியையநாதியேக
தத்துவசொரூபத்தை மதசம்மதம்பெருச்
சாலம்பரகிதமான
சாசுவதபுட்கல நிராலம்பவாலம்ப
சாந்தபதவ்யோமநிலையை
நித்தநிர்மலசகித நிஷ்ப்ரபஞ்சப்பொருளை
நிர்விஷயசுத்தமான
நிர்விகாரத்தைத் தடத்தமாய்நின்றொளிர்
நிரஞ்சனநிராமயத்தைச்
சித்தமறியாதபடி சித்தத்தினின்றிலகு
திவ்யதேசோமயத்தைச்

சிற்பரவெளிக்குள்வளர் தற்பரமதானபர
தேவதையையஞ்சலிசெய்வாம்.

---

## பரிபூரணானந்தம்.

வாசாகயிங்கரிய மன்றியொருசாதன
மனேவாயுநிற்கும்வண்ணம்
வாலாயமாகவும் பழகியறியேன்றுறவு
மார்க்கத்தினிச்சைபோல
நேசானுசாரியாய் விவகரிப்பேனந்த
நினைவையுமறந்தபோது
நித்திரைகொள்வென்றேக நீங்குமெனவெண்ணிலோ
நெஞ்சந்துடித்தயருவேன்
பேசாதவானந்த நிட்டைக்குமறிவிலாப்
பேதைக்கும்வெகுதூரமே
பேய்க்குணமறிந்திந்த நாய்க்குமொருவழிபெரிய
பேரின்பநிட்டையருள்வாய்
பாசாடவிக்குளே செல்லாதவர்க்கருள்
பழுத்தொழுகுதேவதருவே
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௧)

தெரிவாகவூர்வன நடப்பனபறப்பன
செயற்கொண்டிருப்பனமுதற்
றேகங்களத்தனையு மோகங்கொள்பௌதிகஞ்
சென்மித்தவாங்கிறக்கும்
விரிவாயபூதங்க ளொன்றென்றொடொன்றுயழியு
மேற்கொண்டசேடமதுவே

வெறுவெளிநிராலம்ப நிறைசூன்யமுபசாந்த
வேதவேதாந்தஞானம்
பிரியாதபேரொளி பிறக்கின்றவருளருட்
பெற்றோர்கள்பெற்றபெருமை
பிறவாமையென்றைக்கு மிறவாமையாய்வந்து
பேசாமையாகுமெனவே
பரிவாயெனக்குநீ யறிவிக்கவந்ததே
பரிபாககாலமலவோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே.

ஆராயும்வேளையிற் பிரமாதியானாலு
மையவொருசெயலுமில்லை
யமைதியொடுபேசாத பெருமைபெறுகுணசந்த்ர
ராமெனவிருந்தபேரு
நேராகவொருகோப மொருவேளைவரவந்த
நிறைவொன்றுமில்லாமலே
நெட்டுயிர்த்துத்தட் டழிந்துளறுவார்வசன
நிர்வாகமொன்றபேரும்
பூராயமாயொன்று பேசுமிடமொன்றைப்
புலம்புவார்சிவராத்திரிப்
போதுதுயிலோமென்ற விரதியருமறிதுயிற்
போலேயிருந்துதுயில்வார்
பாராதிதனிலுள்ள செயலெலாமுடிவிலே
பார்க்கினின்செயலல்லவோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே.

அண்டபகிரண்டமும் மாயாவிகாரமே
யம்மாயையில்லாமையே

யாமெனவுமறிவுமுண் டப்பாலுமறிகின்ற
வறிவினையறிந்துபார்க்கி
னெண்டிசைவிளக்குமொரு தெய்வவருளல்லாம
லில்லையெனுநினைவுமுண்டிங்
கியானெனதறத்துரிய நிறைவாகிநிற்பதே
யின்பமெனுமன்புமுண்டு
கண்டனவெலாமல்ல வென்றுகண்டனைசெய்து
கருவிகரணங்களோயக்
கண்மூடியொருகண மிருக்கவென்றாற்பாழ்த்த
கர்மங்கள்போராடுதே
பண்டையுளகர்மமே கர்த்தாவெனும்பெயர்ப்
பக்ஷநானிச்சிப்பனோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௪)

சந்ததமுமெனதுசெய லினதுசெயலியானெனுந்
தன்மைநினையன்றியில்லாத்
தன்மையால்வேறலேன் வேதாந்தசித்தாந்த
சமரசசுபாவமிதுவே
யிந்தநிலைதெளியநா னெக்குருகிவாடிய
வியற்கைதிருவுளமறியுமே
யிந்நிலையிலேசற் றிருக்கவென்றான்மடமை
யிதசத்ருவாகவந்து
சிந்தைகுடிகொள்ளுதே மலமாயைகன்மந்
திரும்புமோதொடுவழக்காய்ச்
சென்மம்வருமோவெனவும் யோசிக்குதேமனது
சிரத்தையெனும்வாளுமுதவிப்
பந்தமறமெய்ஞ்ஞான தீரமுந்தந்தெனைப்
பாதுகாத்தருள்செய்குவாய்

பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே.

பூதலயமாகின்ற மாயைமுதலென்பர்சிலர்
பொறிபுலனடங்குமிடமே
பொருளென்பர்சிலர்கரண முடிவென்பர்சிலர்குணம்
போனவிடமென்பர்சிலபேர்
நாதவடிவென்பர்சிலர் விந்துமயமென்பர்சிலர்
நட்டநடுவேயிருந்த
நாமென்பர்சிலருருவ மாமென்பர்சிலர்கருதி
நாடிலருளென்பர்சிலபேர்
பேதமறவுயிர்கெட்ட நிலயமென்றிடுவர்சிலர்
பேசினருவென்பர்சிலபேர்
பின்னுமுன்னுங்கெட்ட சூனியமதென்பர்சிலர்
பிறவுமேமொழிவரிவையாற்
பாதரசமாய்மனது சஞ்சலப்படுமலாற்
பரமசுகநிஷ்டைபெறுமோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே.

அந்தகாரத்தையோ ரகமாக்கிடமின்போலென்
னறிவைச்சுருக்கினவரா
ரவ்வறிவுதானுமே பற்றினதுபற்று
யழுந்தவுந்தலைமீதிலே
சொந்தமாயெழுதப் படித்ததார்மெய்ஞ்ஞான
சுகநிஷ்டைசேராமலே
சோற்றுத்துருத்தியைச் சதமெனவுமுண்டுண்டு
தூங்கவைத்தவரார்கொலோ
தந்தைதாய்முதலான வகிலப்ரபஞ்சந்
தனைத்தந்ததெனதாசையோ

தன்னையேநோவனோ பிறனையேநோவனோ
　　தற்காலமதைநோவனோ
பந்தமானதுதந்த வினையையேநோவனோ
　　பரமார்த்தமேதுமறியேன்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
　　பரிபூரணானந்தமே. (எ)

வாரதெலாமொழிய வருவனவெலாமெய்த
　　மனதுசாக்ஷியதாகவே
மருவநிலைதந்ததும் வேதாந்தசித்தாந்த
　　மரபுசமரசமாகவே
பூராயமாயுணர வாகமதுதந்ததும்
　　பொய்யுடலைநிலையன்றெனப்
போதநெறிதந்ததுஞ் சாசுவதவானந்த
　　போகமேவீடென்னவே
ஏராளமாயுருக வுள்ளன்புதந்தது
　　நின்னதருளின்னுமின்னு
நின்னையேதுணையென்ற வென்னையேகாக்கவொரு
　　நினைவுசற்றுண்டாகிலோ
பாராதியறியாத மோனமேயிடைவிடாப்
　　பற்றுகநிற்கவருள்வாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
　　பரிபூரணானந்தமே. (அ)

ஆழாழிகரையின்றி நிற்கவிலையோகொடிய
　　வாலமமுதாகவிலையோ
வக்கடலின்மீதுவட வனனிற்கவில்லையோ
　　வந்தரத்தகிலகோடி
தாழாமனிலைநிற்க வில்லையோமேருவுந்
　　தனுவாகவளையவிலையோ

சப்தமேகங்களும் வச்ரதாரணையிற்
 சஞ்சரித்திடவில்லையோ
வாழாதுவாழவே யிராமனடியாற்சிலையு
 மடமங்கையாகவில்லையோ
மணிமந்த்ரமாதியால் வேண்டுசித்திகளுலக
 மார்க்கத்தில்வைக்கவில்லையோ
பாழானவென்மனங் குவியவொருதந்திரம்
 பண்ணுவதுனக்கருமையோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
 பரிபூரணானந்தமே.

ஆசைக்கொரளவில்லை யகிலமெல்லாங்கட்டி
 யாளினுங்கடன்மீதிலே
யாணைசெலவேநினைவ ரளகேசனிகராக
 வம்பொன்மிகவைத்தபேரு
நேசித்துரசவாத வித்தைக்கலைந்திடுவர்
 நெடுநாளிருந்தபேரு
நிலையாகவேயினுங் காயகற்பந்தேடி
 நெஞ்சுபுண்ணாவரெல்லாம்
யோசிக்கும்வேளையிற் பசிதீரவுண்பது
 முறங்குவதுமாகமுடியு
முள்ளதேபோதுநா னெனக்குளறியே
 யொன்றைவிட்டொன்றுபற்றிப்
பாசக்கடற்குளே வீழாமன்மனதற்ற
 பரிசுத்தநிலையையருள்வாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
 பரிபூரணானந்தமே.

ஆகபாடல் - கரு.

# பொருள்வணக்கம்.

நித்தியமாய்நிர்மலமாய் நிட்களமாய்நிராமயமாய்
நிறைவாய்நீங்காச்
சுத்தமுமாய்த்தூரமுமாய்ச் சமீபமுமாய்த்துரியநிறை
சுடராயெல்லாம்
வைத்திருந்ததாரகமா யானந்தமயமாகி
மனவாக்கெட்டாச்
சித்துருவாய்நின்றவொன்றைச் சுகாரம்பப்பெருவெளி
யைச் சிந்தைசெய்வாம். (க)

பாதுமனநினையுமந்த நினைவுக்குநினைவாகி
யாதின்பாலும்
பேதமறநின்றுயிருக் குயிராகியன்பருக்கே
பேரானந்தக்
கோதிலமுதூற்றரும்பிக் குணங்குறியொன்றறத்தன்னைக்
கொடுத்துக்காட்டுந்
தீதில்பராபரமான சித்தாந்தப்பேரொளியைச்
சிந்தைசெய்வாம். (உ)

பெருவெளியாயைம்பூதம் பிறப்பிடமாய்ப்பேசாத
பெரியமோனம்
வருமிடமாய்மனமாதிக் கெட்டாதபேரின்ப
மயமாய்ஞானக்
குருவருளாற்காட்டிடவு மன்பரைக்கோத்தறவிழுங்கிக்
கொண்டப்பாலுந்
தெரிவரிதாய்க்கலந்தெந்தப் பொருளந்தப்பொருளினை
யாஞ் சிந்தைசெய்வாம். (௩)

இகபரமுமுயிர்க்குயிரா யானெனதற்றவருறவை
யெந்நாளுஞ்

சுகபரிபூரணமான நிராலம்பகோசரத்தைத்
துரியவாழ்வை
யகமகிழவருந்தேனை முக்கனியைக்கற்கண்டை-
யமிர்தைநாடி-
மொகுமொகெனவிருவிழிநீர் முத்திறைப்பக்கரமலர்கண்
முகிழ்த்துநிற்பாம்.

சாதிகுலம்பிறப்பிறப்புப் பந்தமுத்தியருவுருவத்
தன்மைநாம
மேதுமின்றியெப்பொருட்கு மெவ்விடத்தும்பிரிவறநின்
றியக்கஞ்செய்யுஞ்
சோதியைமாத்தூவெளியை மனதவிழநிறைவான
துரியவாழ்வைத்
தீதில்பரமாம்பொருளைத் திருவருளேநினைவாகச்
சிந்தைசெய்வாம்.

இந்திரசாலங்கனவு் கானலினீரெனவுலக
மெமக்குத்தோன்றச்
சந்ததமுஞ்சிற்பரத்தா லழியாததற்பரத்தைச்
சார்ந்துவாழ்க
புந்திமகிழுறநாளுந் தடையறவானந்தவெள்ளம்
பொலிகவென்றே
வந்தருளுங்குருமௌனி மலர்த்தாளையனுதினமும்
வழுத்தல்செய்வாம்.

பொருளாகக்கண்டபொரு ளெவைக்குமுதற்பொருளா
போதமாகித்
தெருளாகிக்கருதுமன்பர் மிடிதீரப்பருகவந்த
செழுந்தேனாகி

ருளானோர்க்ககம்புறமென் றுன்றுதபூரணவா
னந்தமாகி
ிருடீரவிளங்குபொரு ளியாதந்தப்பொருளினையா
மிறைஞ்சிநிற்பாம். (எ)

அருமறையின்சிரப்பொருளாய் விண்ணவர்மாமுனிவர்சித்
தராதியானோர்
தெரிவரியபூரணமாய்க் காரணங்கற்பனைகடந்த
செல்வமாகிக்
ருதரியமலரின்மண மெள்ளிலெண்ணெயுடலுயிர்போற்
கலந்தெந்நாளுந்
ரியநடுவூடிருந்த பெரியபொருளியாததனைத்
தொழுதல்செய்வாம். (அ)

ிண்ணுதிபூதமெல்லாந் தன்னகத்திலடக்கிவெறு
வெளியாய்ஞானக்
ண்ணாக்கண்டவன்பர் கண்ணூடேயானந்தக்
கடலாய்வேறொன்
றண்ணுதபடிக்கிரங்கித் தானகச்செய்தருளு
மிறையேயுன்றன்
ண்ணருஞ்சாந்தவரு ட்னேநினைந்துகரமலர்க
டலைமேற்கொள்வாம். (கூ)

ிண்ணிறைந்தவெளியா யென்மனவெளியிற்கலந்தறிவாம்
வெளியினூடுங்
ண்ணிறைந்தபேரமுதாய்ச் சதானந்தமானபெருந்
தகையேநின்பா
வண்ணிறைந்தபேரன்பா லுள்ளுருகிமொழிகுளறி
யுவகையாகிக்

கண்ணிறைந்தபுனலுகுப்பக் கரமுகிழ்ப்பநின்னருளைக்
கருத்தில்வைப்பாம்.

வேறு.

ஆதியந்தங்காட்டாத முதலாயெம்மை
யடிமைக்காவளர்த்தெடுத்த வுன்னைபோல
நீதிபெருங்குருவாகி மனவாக்கெட்டா
நிச்சயமாய்ச்சொச்சமதாய் நிமலமாகி
வாதமிடுஞ்சமயநெறிக் கரியதாகி
மௌனத்தோர்பால்வெளியாய் வயங்காநின்ற
சோதியையென்னுயிர்த்துணையை நாடிக்கண்ணீர்
சொரியவிருகரங்குவித்துத் தொழுதல்செய்வாம்.

அகரவுயிரெழுத்தனைத்து மாகிவேறு
யமர்ந்ததெனவகிலாண்ட மனைத்துமாகிப்
பகர்வனவெல்லாமாகி யல்லவாகிப்
பரமாகிச்சொல்லரிய பான்மையாகித்
துகளறுசங்கற்பவிகற் பங்களெல்லாந்
தோயாதவறிவாகிச் சுத்தமாகி
நிகரில்பசுபதியான பொருளைநாடி
நெட்டுயிர்த்துப்பேரன்பா னினைதல்செய்வாம்.

ஆக பாடல் - உரு.

---

## சின்மயானந்தகுரு.

அங்கைகொடுமலர்தூவி யங்கமதுபுளகிப்ப
வன்பினாலுருகிவிழிநீ
ராறுகவாராத முத்தியினதாவேச
வாசைக்கடற்கண்மூழ்கிச்
சங்கரசுயம்புவே சம்புவேயெனவுமொழி
தழுதழுத்திடவணங்குஞ்

சன்மார்க்கநெறியிலாத் துன்மார்க்கனேனையுந்
தண்ணருள்கொடுத்தாள்வையோ
துங்கமிகுபக்குவச் சனகன்முதன்முனிவோர்க
ளொழுதருகில்வீற்றிருப்பச்
சொல்லரியநெறியையொருசொல்லாலுணர்த்தியே
சொரூபாநுபூதிகாட்டிச்
செங்கமலபீடமேற் கல்லாலடிக்குள்வளர்
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (க)

ஆக்கையெனுமிடிகரையை மெய்யென்றபாவிகா
ணத்துவிதவாஞ்சையாத
லரியகொம்பிற்றேனை முடவனிச்சித்தபடி
யாகுமறிவவிழவின்பந்
தாக்கும்வகையேதிநாட் சரியைகிரியாயோக
சாதனம்விடுத்ததெல்லாஞ்
சன்மார்க்கமல்லவிவை நிற்கவென்மார்க்கங்கள்
சாராதபோறிவதாய்
வாக்குமனமணுகாத பூரணப்பொருள்வந்து
வாய்க்கும்படிக்குபாயம்
வருவித்துவட்டாத பேரின்பமானசுக
வாரியினைவாய்மடுத்துத்
தேக்கித்திளைக்கநீ முன்னிற்பதென்றுகாண்
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (உ)

ஒளவியமிருக்கநா னென்கின்றவாணவ
மடைந்திட்டிருக்கலோப

மருளின்மைகூடக் கலந்துள்ளிருக்கமே
    லாசாபிசாசமுதலாம்
வெவ்வியகுணம்பல விருக்குமென்னறிவூடு
    மெய்யணிவீற்றிருக்க
விதியில்லையென்னிலோ பூரணமெனும்பெயர்
    விரிக்கிலுரைவேறுமுளதோ
கவ்வுமலமாகின்ற நாகபாசத்தினாற்
    கட்டுண்டவுயிர்கண்மூர்ச்சை
கடிதகலவலியவரு ஞானசஞ்சீவியே
    கதியானபூமிநடுவுட்
செவ்விதின்வளர்ந்தோங்கு திவ்யகுணமேருவே
    சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
    சின்மயானந்தகுருவே.

ஐவகையெனும்பூத மாதியைவகுத்ததனு
    ளசராசரபேதமான
யாவையும்வகுத்துநல் லறிவையும்வகுத்துமறை
    யாதிநூலையும்வகுத்துச்
சைவமுதலாவளவில் சமயமும்வகுத்துமேற்
    சமயங்கடந்தமோன
சமரசம்வகுத்தநீ யுன்னைநானணுகவுந்
    தண்ணருள்வகுக்கவிலையோ
பொய்வளருநெஞ்சினர்கள் காணாதகாட்சியே
    பொய்யிலாமெய்யர்றிவிற்
போதபரிபூரண வகண்டாகாரமாய்ப்
    போக்குவரவற்றபொருளே
தெய்வமறைமுடிவான பிரணவசொரூபியே
    சித்தாந்தமுத்திமுதலே

சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (ச)

ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினு
லாகின்றவாக்கைநீர்மே
லமர்கின்றகுமிழியென நிற்கின்றதென்னநா
னறியாதகாலமெல்லாம்
புந்திமகிழுறவுண் டுடுத்தின்பமாவதே
போந்தநெறியென்றிருந்தேன்
பூராயமாகநின தருள்வந்துணர்த்தவிவை
போனவழிதெரியவில்லை
யெந்தநிலைபேசினு மிணங்கவில்லையல்லா
விறப்பொடுபிறப்பையுள்ளே
யெண்ணினெஞ்சது பகீரெனுந்துயிலுரு
திருவிழியுமிரவுபகலாய்ச்
செந்தழலின்மெழுகான தங்கமிவையென்கொலோ
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (ரு)

காரிட்டவாணவக் கருவறையிலறிவற்ற
கண்ணிலாக்குழவியைப்போற்
கட்டுண்டிருந்தவெமை வெளியில்விட்டல்லலாங்
காப்பிட்டதற்கிசைந்த
பேரிட்டுமெய்யென்று பேசுபாழ்ம்பொய்யுடல்
பெலக்கவிளையமுதமூட்டிப்
பெரியபுவனத்தினிடை போக்குவரவுறுகின்ற
பெரியவிளையாட்டமைத்திட்
டேரிட்டதன்சுருதி மொழிதப்பினமனைவிட்
டிடருறவுறுக்கியிடர்தீர்த்

திரவுபகலில்லாத பேரின்பவீட்டினி
லிசைந்துதுயில்கொண்மினென்று
சிரிட்டவுலகன்னை வடிவானவெந்தையே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே.

கருமருவுகுகையனைய காயத்தினடுவுட்
களிம்புதோய்செம்பனையயான்
காண்டகவிருக்கநீ ஞானவனன்மூட்டியே
கனிவுபெறவுள்ளுருக்கிப்
பருவமதறிந்துநின் னருளானகுளிகைகொடு
பரிசித்துவேதிசெய்து
பத்துமாற்றுத்தங்க மாக்கியேபணிகொண்ட
பக்ஷத்தையென்சொல்லுவே
னருமைபெறுபுகழ்பெற்ற வேதாந்தசித்தாந்த
மாதியாமந்தமீது
மத்துவிதநிலையரா யென்னையாண்டுன்னடிமை
யானவர்களறிவினூடுந்
திருமருவுகல்லா லடிக்கீழும்வளர்கின்ற
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே.

கூடுதலுடன்பிரித லற்றுநிர்த்தொந்தமாய்க்
குவிதலுடன்விரிதலற்றுக்
குணமற்றுவரவினொடு போக்கற்றுநிலையான
குறியற்றுமலமுமற்று
நாடுதலுமற்றுமேல் கீழ்நடுப்பக்கமென
நண்ணுதலுமற்றுவிந்து

ாதமற்றைவகைப் பூதபேதமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலுமற்றுமே லொன்றற்றிரண்டற்று
வாக்கற்றுமனமுமற்று
ன்னுபரிபூரணச் சுகவாரிதன்னிலே
வாய்மடுத்துண்டவசமாய்த்
ிதடுதலுமற்றவிட நிலையென்றமௌனியே
சித்தாந்தமுத்திமுதலே
ிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (அ)

ா ராதவருளெலாந் தந்தருளமௌனியாய்த்
தாயனையகருணைகாட்டித்
ாளிணையென்முடிசூட்டி யறிவிற்சமாதியே
சாசுவதசம்ப்ரதாயம்
ராமன்மந்திரமு முன்னுமன்முத்திநிலை
யொன்றோடிரண்டெனமல்
ளியெனவும்வெளியெனவு முருவெனவுநாதமா
மொலியெனவுமுணர்வுறாமல்
ராதுபார்ப்பதே யேதுசாதனமற்ற
பரமவநுபூதிவாய்க்கும்
ணமென்றுணர்த்தியது பாராமலந்நிலை
பதிந்தநின்பழவடியர்தம்
ாயிருக்கநின தருள்வேண்டுமையனே
சித்தாந்தமுத்திமுதலே
கிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (கூ)

ாதமாயாதிகடு வந்தமுமிலாததாய்ப்
புனிதமாயவிகாரமாய்ப்

போக்குவரவில்லாத வின்பமாய்நின்றநின்
பூரணம்புகலிடமதா
ஆதரவுவையாம லறிவினைமறைப்பதுநி
னருள்பின்னுமறிவின்மைதீர்த்
தறிவித்துநிற்பதுநி னருளாகிலெளியனேற்
கறிவாவதேதறிவிலா
ஏதம்வருவகையேது வினையேதுவினைதனக்
கீடானகாயமேதென்
இச்சாசுதந்தரஞ் சிறிதுமிலையிகபா
மிரண்டினுண்மலைவுதீரத்
தீதிலருள்கொண்டினி யுணர்த்தியெனையாள்வையோ
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயமானந்தகுருவே.

பத்திநெறிநிலைநின்று நவகண்டபூமிப்
பரப்பைவலமாகவந்தும்
பரவைஃதிடைமூழ்கியு நதிகளிடைமூழ்கியும்
பசிதாகமின்றியெழுநா
மத்தியிடைநின்றுமுதிர் சருகுபுனல்வாயுவினை
வன்பசிதனக்கடைத்து
மௌனத்திருந்துமுயர் மலைநுழைபுகுந்துமே
மன்னுதசநாடிமுற்றுஞ்
சுத்திசெய்தும்மூல ப்ராணனோடங்கியைச்
சோமவட்டத்தடைத்துஞ்
சொல்லரியவமுதுண்டு மற்பவுடல்கற்பங்க
ளோறுநிலைநிற்கவீறு
சித்திசெய்துஞ்ஞான மலதுகதிகூடுமோ
சித்தாந்தமுத்திமுதலே

கிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (கக)
ஆக பாடல் - ருசு.

---

# மௌனகுரு.

நசைநிகளத்தினை நிர்த்தூளிபடவுதறி
யாங்காரமூலையையெற்றி
த்துவிதமதமாகி மதமாறுமாறுக
வங்கையின்விலாழியாக்கிப்
சவிருடன்னிழ லெனச்சுளித்தார்த்துமேற்
பார்த்துப்பரந்தமனதைப்
ரித்தகவளமாய்ப் பூரிக்கவுண்டுமுக
படாமன்னமாயைநூறித்
சுபெறநீவைத்த சின்முத்திராங்குசச்
செங்கைக்குளேயடங்கிச்
ளமயானந்தசுக வெள்ளம்படிந்துநின்
றிருவருட்பூர்த்தியான
சமுறுசற்சார மீதென்னையொருஞான
மத்தகஜமெனவளர்த்தாய்
த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (க)
ந்துவகையாகின்ற பூதமுதனாதமு
மடங்கவெளியாகவெளிசெய்
யாமையறிவாதி பிறிவாகவறிவார்க
ளறிவாகநின்றநிலையிற்
தையறநில்லென்று சும்மாவிருத்திமேற்
சின்மயானந்தவெள்ளங்

தேக்கித்திளைத்துநா னதுவாயிருக்கநீ
செய்சித்ரமிகநன்றுகாண்
எந்தைவடவாற்பரம குருவாழ்கவாழவரு
ளியநந்திமரபுவாழ்க
என்றடியர்மனமகிழ வேதாகமத்துணி
பிரண்டில்லையொன்றென்னவே
வந்தகுருவேவீறு சிவஞானசித்திநெறி
மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

ஆதிக்கநல்கினவ ராரிந்தமாயைக்கெ
னறிவின்றியிடமில்லையோ
அந்தரப்புட்பமுங் கானலின்னீருமோ
ரவசரத்துபயோகமோ
போதித்தநிலையையு மயக்குதேயபயநான்
புக்கவருடோற்றிடாமற்
பொய்யானவுலகத்தை மெய்யாநிறுத்தியென்
புந்திக்குளிந்த்ரஜாலஞ்
சாதிக்குதேயிதனை வெல்லவுமுபாயநீ
தந்தருள்வதென்றுபுகல்வாய்
சன்மதஸ்தாபனமும் வேதாந்தசித்தாந்த
சமரசநிர்வாகநிலையு
மாதிக்கொடண்டப் பரப்பெலாமறியவே
வந்தருளுஞானகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

மின்னனையபொய்யுடலை நிலையென்றுமையிலகு
விழிகொண்டுமையல்பூட்டு

ன்ஞர்களின்பமே மெய்யென்றும்வளர்மாட
மேல்வீடுசொர்க்கமென்றும்
பான்னையழியாதுவளர் பொருளென்றுபோற்றியிப்
பொய்வேடமிகுதிகாட்டிப்
பாறையறிவுதுறவீத லாதிநற்குணமெலாம்
பேரக்கிலேபோகவிட்டுத்
ன்னிகரிலோபாதி பாழ்ம்பேய்பிடித்திடத்
தரணிமிசைலோகாயதன்
மயநடைசாராமல் வேதாந்தசித்தாந்த
சமரசசிவாநுபூதி
ன்னவொருசொற்கொண் டெனைத்தடுத்தாண்டன்பின்
வாழ்வித்தஞானகுருவே
த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே (ச)

பானகமிருக்கின்ற சாலையிடைவேண்டுவ
புசித்தற்கிருக்குமதுபோற்
நஷர்பெறுதர்மாதி வேதமுடனாகமம்
புகலுமதினலாம்பயன்
னநெறிமுக்யநெறி காட்சியனுமானமுத
னவிதங்கடேர்ந்து
னெனக்குளறு படைபுடைபெயர்த்திடவு
நான்குசாதனமுமோர்ந்திட்
னநெறியாஞ்சரியை யாதிசோபானமுற்
றணுபக்ஷசம்புபக்ஷம்
இருவிகற்பமு மாயாதிசேவையு
மறிந்திரண்டொன்றென்னுமோர்
னதவிகற்பமற வென்றுநிற்பதுநமது
மரபென்றபரமகுருவே

மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

கல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியுங்
கருணைசிறிதேதுமில்லாக்
காட்சியுங்கொலைகளவு கட்காமமாட்சியாய்க்
காதலித்திடுநெஞ்சமும்
பொல்லாதபொய்ம்மொழியு மல்லாதுநன்மைகள்
பொருந்துகுணமேதுமறியேன்
புருஷர்வடிவானதே யல்லாதுகனவிலும்
புருஷார்த்தமேதுமில்லேன்
எல்லாமறிந்தநீ யறியாததன்றெனக்
கெவ்வண்ணமுய்வண்ணமோ
இருளையிருளென்றவர்க் கொளிதாரகம்பெறு
மெனக்குநின்னருடாரகம்
வல்லானெனும்பெய ருனக்குள்ளதேயிந்த
வஞ்சகனையாளநினையாய்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

கானகமிலங்குபுலி பசுவொடுகுலாவுநின்
கண்காணமதயானைநீ
கைகாட்டவுங்கையா னெகிடிக்கெனப்பெரிய
கட்டைமிகவேந்திவருமே
போனகமமைந்ததென வக்காமதேனுநின்
பொன்னடியினின்றுசொலுமே
புவிராஜர்கவிராஜர் தவராஜரென்றுனைப்
போற்றிஜயபோற்றியென்பார்
ஞானகருணாகர முகங்கண்டபோதிலே
நவநாதசித்தர்களுமுன்

.பினைவிரும்புவார் சுகர்வாமதேவர்முதன்
ஞானிகளுமுனைமெச்சுவார்
ானகமுமண்ணகமும் வந்தெதிர்வணங்கிடுமுன்
மகிமையதுசொல்லவெளிதோ
ந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (எ)

ருகுசலபக்ஷணிக ளொருகோடியல்லாற்
சகோரபக்ஷிகள்போலவே
வளநிலவொழுகமிர்த தாரையுண்டழியாத
தன்மையரனந்தகோடி
ருவினைகளற்றிரவு பகலென்பதறியாத
வேகாந்தமோனஞான
ன்பநிஷ்டையர்கோடி மணிமந்த்ரசித்திநிலை
யெய்தினர்கள்கோடிசூழக்
ருமணியிழைத்திட்ட சிங்காதனத்தின்மிசை
கொலுவீற்றிருக்குநின்னைக்
ம்பிட்டனந்தமுறை தெண்டனிட்டென்மனக்
குறையெலாந்தீரும்வண்ண
ருமலரெடுத்துனிரு தாளையர்ச்சிக்கவெனை
வாவென்றழைப்பதெந்நாள்
ந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (அ)

ஆங்காரமானகுல வேடவெம்பேய்பாழ்த்த
வாணவத்தினும்வலிதுகாண்
திவினைமயக்கிடு நடுவறியவொட்டாதி
யாதொன்றுதொடினுமதுவாய்த்
ாங்காதுமொழிபேசு மரிகரப்பிரமாதி
தம்மொடுசமானமென்னுந்

கடையற்றதேரிலஞ் சுருவாணிபோலவே
தன்னிலசையாதுநிற்கும்
ஈங்காரெனக்குநிக ரென்னப்ரதாபித்
திராவணாகாரமாகி
இதயவெளியெங்கணுந் தன்னரசுநாடுசெய்
திருக்குமிதனொடெநேரமும்
வாங்காதிலாவடிமை போராடமுடியுமோ
மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

பற்றுவெகுவிதமாகி யொன்றைவிட்டொன்றனைப்
பற்றியுழல்கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தைபெற்றநான் வெளியாகநின்னருள்
பகர்ந்துமறியேன்றுவிதமோ
சிற்றறிவதன்றியு மெவரேனுமொருமொழி
திடுக்கென்றுரைத்தபோது
சிந்தைசெவியாகவே பறையறையவுதரவெந்
நீநெஞ்சமளவளாவ
உற்றுணரவுணர்வற்றுன் மத்தவெறியினர்போல
வுளறுவேன்முத்திமார்க்கம்
உணர்வதெப்படியின்ப துன்பஞ்சமானமா
யுறுவதெப்படியாயினு
மற்றெனக்கையநீ சொன்னவொருவார்த்தையினை
மலையிலக்கெனநம்பினேன்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

ஆக பாடல் - சசு.

# கருணாகரக்கடவுள்.

ர்க்குணநிராமய நிரஞ்சனநிராலம்ப
நிர்விஷயகைவல்யமா.
ஷ்களவசங்கசஞ் சலரகிதநிர்வசன
நிர்த்தொந்தநித்தமுக்த
ப்பரவிஸ்வாதீத வ்யோம்பரிபூரண
சதானந்தஞானபகவ
ம்புசிவசங்கர சர்வேசவென்றுநான்
சர்வகாலமுநினைவனே
ற்புதவகோசர நிவர்த்திபெறுமன்பருக்
கானந்தபூர்த்தியான
த்துவிதநிச்சய சொரூபசாக்ஷாத்கார
வநுபூதியனுகூதமுங்
ப்பனையறக்காண முக்கணுடன்வடநிழற்
கண்ணாடிருந்தகுருவே
ந்தரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (க)

ண்ணதியைந்தொடு புறத்திலுளகருவியும்
வாக்காதிசுரோத்ராதியும்
ளர்கின்றசப்தாதி மனமாதிகலையாதி
மன்னுசுத்தாதியுடனே
காண்ணூற்றெட்டாறுமற் றுள்ளனவுமௌனியாய்ச்
சொன்னவொருசொற்கொண்டதே
வெளியதாயகண் டானந்தசுகவாரி
தோற்றுமதையென்சொல்லுவேன்
ண்ணாருமிசையினொடு பாடிப்படித்தருட்
பான்மைநெறிநின்றுதவருப்
க்குவவிசேஷராய் நெக்குநெக்குருகிப்
பணிந்தெழுந்திருகைகூப்பிக்

கண்ணாறுகளைபுரள நின்றவன்பணையெலாங்
 கைவிடாக்காட்சியுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
 கருணாகரக்கடவுளே.

எல்லாமுனடிமையே யெல்லாமுனுடைமையே
 யெல்லாமுனுடையசெயலே
எங்கணும்வியாபிநீ யென்றுசொலுமியல்பென்
 றிருக்காதிவேதமெல்லாஞ்
சொல்லான்முழக்கியது மிக்கவுபகாரமாச்
 சொல்லிறந்தவரும்விண்டு
சொன்னவையுமிவைநல்ல குருவானபேருந்
 தொகுத்தநெறிதானுமிவையே
அல்லாமலில்லையென. நன்றாவறிந்தே
 னறிந்தபடிநின்றுசுகநான்
ஆகாதவண்ணமே யிவ்வண்ணமாயினே
 னதுவுநினதருளென்னவே
கல்லாதவறிஞனுக் குள்ளேயுணர்த்தினை
 கதிக்குவகையேதுபுகலாய்
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
 கருணாகரக்கடவுளே.

பட்டப்பகற்பொழுதை யிருளென்றமருளர்தம்
 பக்ஷமோவெனதுபக்ஷம்
பார்த்தவிடமெங்கணுங் கோத்தநிலைகுலையாது
 பரமவெளியாகவொருசொல்
திட்டமுடன்மௌனியா யருள்செய்திருக்கவுஞ்
 சேராமலாராகநான்
சிறுவீடுகட்டியதி னடுசோற்றையுண்டுண்டு
 தேக்குசிறியார்கள்போல

டணையதாக்கற்ற கல்வியும்விவேகமு
நன்னிலயமாகவுன்னி
னென்றுநீயென் றிரண்டில்லையென்னவே
நடுவேமுளைத்தமனதைக்
டவறியாமலே வாடினேனெப்போது
கருணைக்குரித்தாவனோ
ந்தரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (ச)

மெய்விடாநாவுள்ள மெய்யருளிருந்துநீ
மெய்யானமெய்யையெல்லாம்
மய்யெனவுணர்த்தியது மெய்யிதற்கையமிலை
மெய்யேதுமறியாவெறும்
பாய்விடாப்பொய்யினே னுள்ளத்திருந்துதான்
பொய்யானபொய்யையெல்லாம்
பாய்யெனுவண்ணமே புகலவைத்தாயெனிற்
புன்மையேனென்செய்குவேன்
மவிடாதெழுநீல கண்டகுருவேவிஷ்ணு
வடிவானஞானகுருவே
லர்மேவிமறையோது நான்முகக்குருவே
மதங்கடொறுநின்றகுருவே
கவிடாதேயென்ற வன்பருக்கன்பாய்க்
கருத்தூடுணர்த்துகுருவே
ந்தரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (ரு)

ண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே
பாவித்திறைஞ்சவாங்கே
ார்க்கின்றமலருடு நீயேயிருத்தியப்
பனிமலரெடுக்கமனமும்

நண்ணேனலாமலிரு கைதான்குவிக்கவெனி
ணுனுமென்னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போ தனாக்கும்பிடாதலா
ஞன்பூசைசெய்யன்முறையோ
விண்ணேவிணுதியாம் பூதமேநாதமே
வேதமேவேதாந்தமே
மேதக்கேள்வியே கேள்வியூம்பூமிக்குள்
வித்தையவித்தின்முளையே
கண்ணேகருத்தேயெ னெண்ணேயெழுத்தே
கதிக்கானமோனவடிவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

சந்ததமும்வேதமொழி யாதொன்றுபற்றினது
தான்வந்துமுற்றுமெனலால்
சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது
சதாநிஷ்டர்நினைவதில்லை
சிந்தையறியார்க்கிது போதிப்பதல்லவே
செப்பினும்வெகுதர்க்கமாந்
திவ்யகுணமார்க்கண்டர் சுகாதிமுனிவோர்கள்
சித்தாந்தநித்தியரலவோ
இந்த்ராதிதேவதைகள் பிரமாதிகடவுள
ரிருக்காதிவேதமுனிவர்
எண்ணரியகணநாதர் நவநாதசித்தர்க
ளிரவிமதியாதியோர்கள்
கந்தருவர்கின்னரர்கண் மற்றையர்கள்யாவருங்
கைகுவித்திடுதெய்வமே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

ள்ளுமறியாமனது பலிகொடுத்தேன்கர்ம
துஷ்டதேவதைகளில்லை
ரியநிறைசாந்ததே வதையாமுனக்கே
தொழும்பனன்பபிஷேகநீர்
ள்ளுறையிலென்னுவி நைவேத்தியம்ப்ராண
னுங்குமதிதூபதீபம்
நகால்மன்றிது சதாகாலபூசையா
வொப்புவித்தேன்கருணைகூர்
தள்ளிமறைவடியிட்ட வமுதப்பிழம்பே
தெளிந்ததேனேசீனியே
வ்யரசம்யாவுந் திரண்டொழுகுபாகே
தெவிட்டாதவானந்தமே
ர்ளனறிவூடுமே மெள்ளமௌவெளியாய்க்
கலக்கவருநல்லவுறவே
நதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (அ)

டல்குழையவென்பெலா நெக்குருகவிழிநீர்ச
ளூற்றெனவெதும்பியூற்ற
சிகாந்தத்தினைக் கண்டணுகல்போலவே
யோருறவுமுன்னியுன்னிப்
படெனநெஞ்சம் பதைத்துண்டுக்குறப்
பாடியாடிக்குதித்துப்
ணிமதிமுகத்திலே நிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
லவிழுமலரனைய கைவிரித்துக்கூப்பி
வானையவானிலின்ப
ழையேமழைத்தாரை வெள்ளமேநீடூழி
வாழியெனவாழ்த்தியேத்தும்

கடன்மடைதிறந்தனைய வன்பரன்புக்கெளியை
கன்னெஞ்சனுக்கெளியையோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.
இங்குற்றபடியங்கு மெனவறியுநல்லறிஞ
ரெக்காலமும்முதவுவார்
இன்சொறவறார்பொய்ம்மை யாமிழுக்குரையா
ரிரங்குவார்கொலைகள்பயிலார்
சங்கற்பசித்தரவ ருள்ளக்கருத்திலுறை
சாக்ஷிநீயிகபரத்துஞ்
சந்தானகற்பகத் தேவாயிருந்தே
சமஸ்தவின்பமுமுதவுவாய்
சிங்கத்தையொத்தெனைப் பாயவருவினையினைச்
சேதிக்கவருசிம்புளே
சிந்தாகுலத்திமிர மகலவருபானுவே
தீனனேன்கரையேறவே
கங்கற்றபேராசை வெள்ளத்தின்வளாருட்
ககனவட்டக்கப்பலே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

ஆக பாடல் - ௫௬.

## சித்தர்கணம்.

திக்கொடுதிகந்தமும் மனவேகமென்னவே
சென்றோடியாடிவருவீர்
செம்பொன்மகமேருவொடு குணமேருவென்னவே
திகழ்துருவனளவளாவி

ரமிருசக்ரதர னென்னநிற்பீர்கையி
    லுழுந்தமிழுமாசமனமா
ழுகடலையும் பருகவல்லீரிந்த்ர
    னுலகுமயிராவதமுமே
க்கெளியபந்தா வெடுத்துவிளையாடுவீர்
    ககனவட்டத்தையெல்லாம்
கிடைவிருத்தியே யஷ்டகுலவெற்பையுங்
    காட்டுவீர்மேலுமேலு
க்கசித்திகளெலாம் வல்லநீரடிமைமுன்
    விளங்கவருசித்தியிலையோ
தாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
    வித்தகச்சித்தர்கணமே. (௧)

ட்டளிதுதைந்துவளர் கற்பகநனீழலைப்
    பாரினிடைவரவழைப்பீர்
மநிதிசங்கநிதி யிருபாரிசத்திலும்
    பணிசெயுந்தொழிலாளர்போல்
ட்டதுகொடுத்துவர நிற்கவைப்பீர்பிச்சை
    கேட்டுப்பிழைப்போரையும்
டபதியாக்குவீர் கற்பாந்தவெள்ளமொரு
    கேணியிடைகுறுகவைப்பீர்
டினையெடுத்தா யிரத்தெட்டுமாற்றாக
    வொளிவிடும்பொன்னாக்குவீர்
கனுமிளைப்பாற யோகதண்டத்திலே
    புலகுசுமையாகவருளான்
டிடவும்வல்லநீ ரென்மனக்கல்லையனன்
    மெழுகாக்கிவைப்பதரிதோ
தாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
    வித்தகச்சித்தர்கணமே. (௨)

பாரோடுநன்னீராதி யொன்றொடொன்றாகவே
பற்றிலயமாகுபோழ்து
பரவெளியின்மருவுவீர் கற்பாந்தவெள்ளம்
பரந்திடினதற்குமீதே
நீரிலுறைவண்டாய்த் துவண்டுசிவயோகநிலை
நிற்பீர்விகற்பமாகி
நெடியமுகிலேழும் பரந்துவருஷிக்கிலோ
நிலவுமதிமண்டலமதே
ஊமொனவிளங்குவீர் பிரமாதிமுடிவில்விடை
யூர்தியருளாலுலவுவீர்
உலங்கள்கீழ்மேல தாகப்பெருங்காற்
றுலாவினற்றாரணியினான்
மேருவெனவசையாம னிற்கவல்லீருமது
மேதக்கசித்தியெளிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

எண்ணரியபிறவிதனின் மானிடப்பிறவிதான்
யாதினும்மரிதரிதுகாண்
இப்பிறவிதப்பினா லெப்பிறவிவாய்க்குமோ
வேதுவருமோவறிகிலேன்
கண்ணகனிலத்துநா னுள்ளபொழுதேயருட்
ககனவட்டத்தினின்று
காலூன்றிநின்றுபொழி யானந்தமுகிலொடு
கலந்துமதியவசமுறவே
பண்ணுவதுநன்மையிந் நிலைபதியுமட்டுமே
பதியாயிருந்ததேகப்
பவுரிகுலையாமலே கௌரிகுண்டலியாயி
பண்ணவிநனருளினாலே

ணிலவுமதியமுத மொழியாதுபொழியவே
வேண்டுவேனுமதடிமைநான்
தாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௪)

ய்திகழுமுலகநடை யென்சொல்கேனென்சொல்கேன்
பொழுதுபோக்கேதென்னிலோ
ய்புட்ணிமித்தம் புசிப்புக்கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
தவமலாமலிது செய்தவமதல்லவே
கண்கெட்டபேர்க்கும்வெளியாய்க்
டதிதுவிண்டிதைக் கண்டித்துநிற்றலெக்
காலமோவதையறிகிலேன்
திகழுமுகிலினங் குடைநிழற்றிடவட்ட
வரையினெடுசெம்பொன்மேரு
ல்வரையின்முதுகூடும் யோகதண்டக்கோல்
வரைந்துசயவிருதுநாட்டி
ய்திகழுமஷ்டாங்க யோகபூமிக்குள்வளர்
வேந்தரோகுணசாந்தரோ
தாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௫)

நசதுரகமுதலான சதுரங்கமனமாதி
கேள்வியினிசைந்துநிற்பக்
டிகொண்டதலமாறு மும்மண்டலத்திலுங்
கிள்ளாக்குசெல்லமிக்க
சவிதமதாய்நின்ற நாதங்களோலிடச்
சிங்காசனாதிபர்களாய்த்
க்குத்திகந்தமும் பூரணமதிக்குடை
திகழ்ந்திடவசந்தகாலம்

இசையமலர்மீதுறை மணம்போலவானந்த
மிதயமேற்கொள்ளும்வண்ணம்
என்றைக்குமழியாத சிவராசயோகமா
யிந்த்ராதிதேவர்களெலாம்
விஜயஜயஜயவென்ன வாசிசொல்வேகொலு
விருக்குநும்பெருமையெளிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

ஆணிலைபெண்ணிலை யென்போலவொருபேதை
யகிலத்தின்மிசையுள்ளதோ
ஆடியகறங்குபோ லோடியுழல்சிந்தையை
யடக்கியொருகணமேனும்யான்
காணிலேன்றிருவருளை யல்லாதுமௌனியாய்க்
கண்மூடியோடுமூச்சைக்
கட்டிக்கலாமதியை முட்டவேமூலவெங்
கனலினையெழுப்பநினைவும்
பூணிலேனிற்றைநாள் கற்றதுங்கேட்டதும்
போக்கிலேபோகவிட்டுப்
பொய்யுலகநயினை நயினுங்கடையான
புன்மையேனின்னமின்னம்
வீணிலேயலையாமன் மலையிலக்காகநீர்
வெளிப்படத்தோற்றல்வேண்டும்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

கன்னலமுதெனவுமுக் கனியெனவும்வாயூறு
கண்டெனவுமடியெடுத்துக்
கடவுளர்கடந்தல வழுதழுதுபேய்போற்
கருத்திலெழுகின்றதெல்லாம்

ன்ன தறியாமையறி வென்னுமிருபகுதியா
    லீட்டுதமிழென்றமிழினுக்
ன்னல்பகராதுலக மாரர்மைமேலிட்
    டிருத்தலாலித்தமிழையே
சான்னவனியாவனவன் முத்திசித்திகளெலாந்
    தோய்ந்தநெறியேபடித்தீர்
சால்லுமெனவவர்நீங்கள் சொன்னவவையிற்சிறிது
    தோய்ந்தகுணசாந்தனென்வே
ன்னல்பெறவேசொல்ல வச்சொல்கேட்டடிமைமனம்
    விகசிப்பதெந்தநாளோ
வதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
    வித்தகச்சித்தர்கணமே. (அ)

பாற்பினொடுகைகாலில் வள்ளுகிர்படைத்தலாற்
    பொந்திடையொடுக்கமுறலால்
யாலிவானவெண்ணீறு பூசியேயருள்கொண்டு
    பூரித்தவெண்ணீர்மையால்
ற்படவிளங்குகக னத்திலிமையாவிழி
    யிசைந்துமேனோக்கமுறலால்
ரவுபகலிருளான கனதந்திபடநூறி
    யிதயங்களித்திடுதலால்
ற்பலவிதங்கொண்ட புலிகலையினுரியது
    படைத்துப் ப்ரதாபமுறலால்
ணிவெயில்கள்புகுதாம னெடியவான்றொடர்நெடிய
    பருமரவனங்களாரும்
வற்பினிடையுறைதலாற் றவராசசிங்கமென
    மிக்கோருமைப்புகழ்வர்காண்
வதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
    வித்தகச்சித்தர்கணமே. (௯)

கல்லாதபேர்களே நல்லவர்கணல்லவர்கள்
கற்றுமறிவில்லாதவென்
கர்மத்தையென்சொல்வேன் மதியையென்சொல்லுவே
கைவல்யஞானநீதி
நல்லோருரைக்கிலோ கர்மமுக்கியமென்று
நாட்டுவேன்கர்மமொருவன்
நாட்டினுலோபழைய ஞானமுக்கியமென்று
நவிலுவேன்வடமொழியிலே
வல்லானொருத்தன்வர வுந்த்ராவிடத்திலே
வந்ததாவிவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரி னங்ஙனேவடமொழியின்
வசனங்கள்சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைவந்த
வித்தையென்முத்திதருமோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

ஆக பாடல் - ௬௬.

---

## ஆனந்தமானபரம்.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டைநீக்குமக்
குணமொன்றுமொன்றிலேன்பால்
கோரமெத்தனைபக்ஷ பாதமெத்தனைவன்
குணங்களெத்தனைகொடியபாழ்ங்
கல்லாமையெத்தனை யகந்தையெத்தனைமனக்
கள்ளமெத்தனையுள்ளசற்
காரியஞ்சொல்லிடினு மறியாமையெத்தனை
கதிக்கென்றமைத்தவருளில்

=ல்லாமையெத்தனை விர்தாகோஷ்டியென்னிலோ
செல்வமெத்தனைமுயற்சி
ந்தையெத்தனைசலன மிந்த்ராஜாலம்போன்ற
தேகத்தில்வாஞ்சைமுதலாய்
ல்லாண்மையெத்தனை யமைத்தனையுனக்கடிமை
யானேனிவைக்குமாளோ
ண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (க)

ருளாகிமருளாகி யுழலுமனமாய்மனஞ்
சேர்ந்துவளர்சித்தாகியச்
ந்தெலாஞ்சூழ்ந்தசிவ சித்தாய்விசித்ரமாய்த்
திரமாகிநாளுவிதப்
பாருளாகியப்பொருளை யறிபொறியுமாகியைம்
புலனுமாயைம்பூதமாய்ப்
றமுமாயகமுமாய்த் தூரஞ்சமீபமாய்ப்
போக்கொடுவரத்துமாகி
ருளாகியொளியாகி நன்மைதீமையுமாகி
யின்றாகினாளையாகி
ன்றுமாயொன்றுமாய்ப் பலவுமாயாவுமா
யிவையல்லவாயநின்னை
ருளாகிநின்றவர்க ளறிவதல்லாலொருவ
ரறிவதற்கெளிதாகுமோ
ண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (உ)

ாறுபடுதர்க்கந் தொடுக்கவறிவார்சாண்
வயிற்றின்பொருட்டதாக
ண்டலமும்விண்டலமு மொன்றாகிமனமுழல
மாலாகிநிற்கவறிவார்

வேறுபடுவேடங்கள் கொள்ளவறிவாரொன்றை
    மெணமெணென்றகம்வேறதாம்
வித்தையறிவாரொமைப் போலவேச்சந்தைபோன்
    மெய்ந்நூல்விரிக்கவறிவார்
சீறுபுலிபோற்சீறி மூச்சைப்பிடித்துவிழி
    செக்கச்சிவக்கவறிவார்
திரமென்றுதந்தம் மதத்தையேதாமதச்
    செய்கைகொடுமுளறவறிவார்
ஆறுசமயங்கடொறும் வேறுவேறாகிவிளை
    யாடுமுனையாவரறிவார்
அண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
    யானந்தமானபரமே.

காயிலையுதிர்ந்தகனி சருகுபுனன்மண்டிய
    கடும்பசிதனக்கடைத்தும்
கார்வரையின்முழையிற் கருங்கல்போலசையாது
    கண்மூடிநெடிதிருந்தும்
தீயினிடைவைகியுந் தோயமதின்மூழ்கியுந்
    தேகங்களென்பெலும்பாய்த்
தெரியநின்றுஞ்சென்னி மயிர்கள்கூடாக்குருவி
    தெற்றவெயிலூடிருந்தும்
வாயுவையடக்கியு மனதினையடக்கியு
    மௌனத்திலேயிருந்து
மதிமண்டலத்திலே கனல்செல்லவமுதுண்டு
    வனமூடிருந்துமறிஞர்
ஆயுமறைமுடிவான வருணாடிநாடிமை
    யகிலத்தைநாடன்முறையோ
அண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
    யானந்தமானபரமே.

ழமசுத்தமுந் துக்கசுகபேதமுந்
தொந்தமுடனிர்த்தொந்தமும்
மொடுசூக்ஷமமு மாசையுநிராசையுஞ்
சால்லுமொருசொல்லின்முடிவும்
யொடுமுத்தியும் பாவமொடபாவமும்
பேதமொடபேதநிலையும்
மையொடுசிறுமையு மருமையுடனெளிமையும்
பெண்ணினுடனாணுமற்று
மமநித்தமு மஞ்சனநிரஞ்சனமு
ஷ்களமுநிகழ்சகளமு
நீதியு மாதியொடநாதியு
ர்விஷயவிஷயவடிவும்
னயுநீயலதெ ளத்தனையுமில்லையெனின்
ாங்களுநீயன்றியுண்டோ
டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
ானந்தமானபரமே. (௫)

நமாணவக் காட்டைக்களைந்தறக்
ண்டகங்காரமென்னுங்
ப்பிளந்துநெஞ் சகமானபூமிவெளி
ாணத்திருத்திமேன்மேற்
யறியாத மோனமாம்வித்தைப்
ித்தன்புநீராகவே
சியதுபயிராகு மட்டுமாமாயைவன்
றவையணுகாதவண்ண
நின்றுவிளை போகம்புசித்துண்ட
ின்னன்பர்கூட்டமெய்த
ின்படிக்குநீ முன்னின்றுகாப்பதே
ின்னருட்பாரமென்றும்

ஆராருமறியாத சூதான வெளியில்வெளி
யாகின்றதுரியமயமே
அண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

வானாதிபூதமா யகிலாண்டகோடியாய்
மலையாகிவளைகடலுமாய்
மதியாகியிரவியாய் மற்றுளவெலாமாகி
வான்கருணைவெள்ளமாகி
நானாகிநின்றவனு நீயாகிநின்றிடவு
நானென்பதற்றிடாதே
நானானெனக்குளறி நானாவிகாரியாய்
நானறிந்தறியாமையாய்ப்
போனாலதிட்டவழி செல்லவெளிதோபகற்
பொழுதுபுகுமுன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள்வான்றனை யெழுப்பவசமோவிவ
போதிப்பதெந்தநெறியை
ஆனாலுமென்கொடுமை யநியாயமநியாய
மார்பாலெடுத்துமொழிவேன்
அண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

பொய்யினேன்புலையினேன் கொலையினேனின்னரு
புலப்படவறிந்துநிலையாப்
புன்மையேன்கல்லாத தன்மையேனன்மைபோற்
பொருளலாப்பொருளைநாடும்
வெய்யனேன்வெகுளியேன் வெறியனேன்சிறியனே
வினையினேனென்றென்னைநீ
விட்டுவிடநினைவையேற் றட்டழிவதல்லாது
வேறுகதியேதுபுகலாய்

யனே மெய்யனே யுயிரினுக்குயிரான
துணைவனேயிணையொன்றிலாத்
யனே துரியமுங் காணுவதீதனே
சுருதிமுடிமீதிருந்த
னேயப்பனே யெனுமறிஞரறிவைவிட்
டகலாதகருணைவடிவே
அடகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (அ)

தனே விதங்கடான் கற்கினுங்கேட்கினுமென்
னிதயமுமொடுங்கவில்லை
னெனுமகந்தைதா னெள்ளளவுமாறவிலை
யாதினும்மபிமானமென்
தமிசைகுடிகொண்ட தீமையொடிரக்கமென்
சென்மத்துநானறிகிலேன்
மொடுதவவிரத மொருகனவிலாயினுந்
தெரிசனங்கண்டுமறியேன்
பாய்த்தமொழியல்லான் மருந்துக்குமெய்ம்மொழி
புகன்றிடேன்பிறர்கேட்கவே
பாதிப்பதல்லாது சும்மாவிருந்தருள்
பொருந்திடாப்பேதைநானே
த்தனைகுணக்கேடர் கண்டதாக்கேட்டதா
வவனிமிசையுண்டோசொலாய்
ண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (கூ)

க்காலமுந்தனக் கென்னவொருசெயலிலா
வேழைநீயென்றிருந்திட்
டனதாவியுடல்பொருளு மௌனியாய்வந்துகை
யேற்றுநமதென்றவன்றே

பொய்க்காலதேசமும் பொய்ப்பொருளில்வாஞ்சையு
　　பொய்யுடலைமெய்யென்னலும்
பொய்யுறவுபற்றலும் பொய்யாகுநானென்னல்
　　பொய்யினும்பொய்யாகையான்
மைக்காலிருட்டனைய விருளில்லையிருவினைகள்
　　வந்தேறவழியுமில்லை
மனமில்லையம்மனத் தினமில்லைவேறுமொரு
　　வரவில்லைபோக்குமில்லை
அக்காலமிக்கால மென்பதில்லையெல்லா
　　மதீதமயமானதன்றோ
அண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
　　யானந்தமானபரமே.

ஆக பாடல் - எசுஈ.

---

## சுகவாரி.

இன்னமுதுகனிபாகு கற்கண்டுசீனிதே
　　னெனருசித்திடவலியவந்
தின்பங்கொடுத்தநினை யென்நேரநின்னன்ப
　　ரிடையறாதருகிராடி
உன்னியகருத்தவிழ வுளாகுளறியுடலெங்கு
　　மோய்ந்தயர்ந்தவசமாகி
உணர்வரியபேரின்ப வநுபூதியுணர்விலே
　　யுணர்வார்களுள்ளபடிகாண்
கன்னிகையொருத்திசிற் றின்பம்வேம்பென்னினுங்
　　கைக்கொள்வள்பக்குவத்திற்
கணவனருள்பெறின்முனே சொன்னவாறென்னெனக்
　　கருதிநகையாவளதுபோற்

ன்னபடிகேட்குமிப் பேதைக்குநின்கருணை
தோற்றிற்சுகாரம்பமாம்
நிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (க)

பின்வழியறியாத வென்னைத்தொடர்ந்தென்னை
பறியாதபக்குவத்தே
ப்பெருக்கைப் பெருக்கிக்கொடுத்துநா
னற்றேனலந்தேனென
லமயங்கவே பித்தேற்றிவிட்டா
பிரங்கியொருவழியாயினும்
வெள்ளமாகவந் துள்ளங்களிக்கவே
யென்னைநீகலந்ததுண்டோ
ருவமலருக்கு மணமுண்டுவெண்டுண்டு
தண்முகைதனக்குமுண்டோ
னேற்கிவ்வணந் திருவுளமிரங்காத
தன்மையாற்றனியிருந்து
முறினெங்ஙனே யழியாதநின்னன்பர்
சுகம்வந்துவாய்க்குமுறையாய்
நிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (உ)

லனுமையவொரு காலத்திலுருகுமென்
கன்னெஞ்சமுருகவிலையே
ணக்கிணங்காத வன்மையையுநான்முகன்
கற்பிக்கவொருகடவுளோ
ான்வகுத்ததே வாய்க்காலெனும்பெரு
வழக்குக்கிழுக்குமுண்டோ
மாய்நின்றின்ப மழையாயிரங்கியென்னை
வாழ்விப்பதுன்பரங்காண்

பொல்லாதசேயெனிற் ருய்தள்ளனீதமோ
புகலிடம்பிறிதுமுண்டோ
பொய்வார்த்தைசொல்லிலோ திருவருட்கயலுமாய்
புன்மையேனுவனந்தோ
சொல்லான்முழக்கிலோ சுகமில்லைமௌனியாய்ச்
சும்மாவிருக்கவருளாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

என்பெலாநெக்குடைய ரோமஞ்சிலிர்ப்பவுட
லிளகமன தழலின்மெழுகாய்
இடையருதுருகவரு மழைபோலிரங்கியே
யிருவிழிகணீரிறைப்ப
அன்பினுன்மூர்ச்சித்த வன்பருக்கங்ஙனே
யமிர்தசஞ்சீவிபோல்வந்
தானந்தமழைபொழிவை யுள்ளன்பிலாதவெனை
யார்க்காகவடிமைகொண்டாய்
புன்புலான்மயிர்தோ னரம்பென்புமொய்த்திடு
புலைக்குடிலிலருவருப்புப்
பொய்யல்லவேயிதனை மெய்யென்றுநம்பியென்
புத்திசெலுமோபாழிலே
துன்பமாயலையவோ வுலகநடையையவொரு
சொப்பனத்திலும்வேண்டிலேன்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

வெந்நீர்பொருதெனுடல் காலின்முட்டைக்கவும்
வெடுக்கென்றசைத்தெடுத்தால்
விழியிமைத்தங்ஙனே தண்ணருளைநாடுவேன்
வேறொன்றையொருவர்சொல்லின்

ரமையோவென் முகம்வாடிநிற்பதுவு
மையறின்னருளறியுமே
லுமெத்தப் பயந்தவனியானென்னை
யாண்டநீகைவிடாதே
ரமென்றிலே யுடற்சுமையதாகவு
மெடுத்தாலிறக்கவென்றே
கங்குமொருதீர்வை யாயமுண்டாயினு
மிறைஞ்சுகராதியான
ன்னீர்மையாளர்க்கு மானுடம்வகுத்தவரு
டுணையென்றுநம்புகின்றேன்
நிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (௫)

வவனவற்றிடு நிராசையென்றொருபூமி
பற்றிப்பிடிக்கும்யோகப்
கிற்பிராணலய மென்னுமொருபூமியிவை
பற்றின்மனமறுமென்னவே
றயஞ்சடைமௌனி தானேகனிந்தகனி
கனிவிக்கவந்தகனிபோல்
டிந்நெறியெனத் திருவுளக்கனிவினொடு
கனிவாய்திறந்துமொன்றைப்
றவனுமல்லேன் பெருதவனுமல்லேன்
பெருக்கத்தவித்துளறியே
ண்ணீர்மையென்னவிரு கண்ணீரிறைத்துநான்
பேய்போலிருக்கவுலகம்
நகைசெய்யவே யுலையவிட்டாயெனிற்
சொல்லவினிவாயுமுண்டோ
நிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (௬)

அரும்பொனே மணியே யென்னன்பே யென்னன்பான
வறிவேயென்னறிவி லூறும்
ஆனந்தவெள்ளமே யென்றென்றுபாடினே
னாடினே னாடிநாடி
விரும்பியேகூவினே னுலறினேனலறினேன்
மெய்சிலிர்த்திருகைகூப்பி
விண்மாரியெனவெனிரு கண்மாரிபெய்யவே
வேசற்றயர்ந்தேனியான்
இரும்புநேர்நெஞ்சகக் கள்வனானாலுமுனை
யிடைவிட்டுநின்றதுண்டோ
என்றுநீயன்றுநா னுன்னடிமையல்லவோ
யாதேனுமறியாவெறுந்
துரும்பனேனென்னினுங் கைவிடுதனீதியோ
தொண்டரொடுகூட்டுகண்டாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

பாராதியண்டங்க ளத்தனையும்வைக்கின்ற
பரவெளியினுண்மைகாட்டிப்
பற்றுமனவெளிகாட்டி மனவெளியினிற்றோய்ந்
பாவியேன்பரிசுகாட்டித்
தாராளமாய்நிற்க நிர்ச்சிந்தைகாட்டிச்
சதாகாலநிஷ்டையெனவே
சகசநிலைகாட்டினை சுகாதீதநிலையந்
தனைக்காட்டநாள்செல்லுமோ
காராரவெண்ணரு மனந்தகோடிகளின்று
காலூன்றிமழைபொழிதல்போல்
கால்வீசிமின்னிப் படர்ந்துபரவெளியெலாங்
கம்மியானந்தவெள்ளம்

ராதுபொழியவே கருணையின்முழங்கியே
தொண்டரைக்கூவுமுறிலே
நிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (அ)

த்தசமயமோ வொன்றுசொனபடியொன்று
பேசாதுதுறவாகியே
ாதபெரியோர்க ளிருவிகற்பத்திறற்
பேசார்கள்பரமகுருவாய்ப்
திக்குமுக்கணிறை நேர்மையாய்க்கைக்கொண்டு
போதிப்பதாச்சரிவிலே
க்குவரவறவின்ப நீக்கமறவசனமாப்
போதிப்பதெவனையனே
த்தசாதனமும் யோகியர்கணமதென்று
சங்கிப்பராதலாலே
ணிலேதானு யயர்ந்துவிடுவோமெனத்
தனியிருந்திடனங்ஙனே
திக்கமனமாயை தனையேவிஞலடிமை
சுகமாவதெப்படிசொலாய்
நிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (கூ)

ண்டமுடிதன்னிலோ பகிரண்டமதனிலோ
வலரிமண்டலநடுவிலோ
ணடுவிலோவமிர்த மதிநடுவிலோவன்ப
ரகமுருகிமலர்கடுவித்
ண்டமிடவருமூர்த்தி நிலையிலோதிக்குத்
திகந்தத்திலோவெளியிலோ
ழ்விந்துநாதநிலை தன்னிலோவேதாந்த
சித்தாந்தநிலைதன்னிலோ

கண்டபலபொருளிலோ காணாதநிலையெனக்
கண்டசூனியமதனிலோ
காலமொருமூன்றிலோ பிறவிநிலைதன்னிலோ
கருவிகரணங்களோய்ந்த
தொண்டர்களிடத்திலோ நீவீற்றிருப்பது
தொழும்பனேற்குளவுபுகலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

எந்தநாள்கருணைக் குரித்தாகுநாளெனவு
மென்னிதயமெனைவாட்டுமே
ஏதென்றுசொல்லுவேன் முன்னொடுபின்மலைவறவு
மிற்றைவரையாதுபெற்றேன்
பந்தமானதிலிட்ட மெழுகாகியுள்ளம்
பதைத்துப்பதைத்துருகவோ
பரமசுகமாவது பொறுப்பரியதுயரமாய்ப்
பலகாலுமூர்ச்சிப்பதோ
சிந்தையானதுமறிவை யென்னறிவிலறிவான
தெய்வநீயன்றியுளதோ
தேகநிலையல்லவே யுடைகப்பல்கப்பலாய்த்
திரையாழியூடுசெலுமோ
சொந்தமாயாண்டநீ யறியார்கள்போலவே
துன்பத்திலாழ்த்தன்முறையோ
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

எந்நாளுமுடலிலே யுயிராமுனைப்போ
லிருக்கவிலையோமனமெனும்
யானுமென்னட்பாம் பிராணனுமெமைச்சடம
தென்றுனைச்சித்தென்றுமே

ளிலெவனோ பிரித்தானதைக்கேட்ட
வன்றுமுதலின்றுவரையும்
ாயமாயெமை யடக்கிக்குறுக்கே
யடர்ந்தரசுபண்ணியெங்கண்
றுகநீயென்ன கோட்டைகொண்டாயென்று
ழடமனமிகவுமேச
டெரியுமனலிட்ட மெழுகாயுளங்கருகன்
ழறைமையோபதிஞயிரம்
ாஞலுநின்னரு ளிரங்கவிலேயேயினிச்
சுகம்வருவதெப்படிசொலாய்
ிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (கஉ)

ஆக பாடல் - அஅ.

---

## எங்குநிறைகின்றபொருள்.

ின்றியோரணுவு மசையாதெனும்பெரிய
வாப்தர்மொழியொன்றுகண்டால்
ாவதேதுசில வறியாமையேதிவை
பறிந்தார்களறியார்களார்
ணமொடிருந்ததா றென்போலுடம்பெலாம்
வாயாய்ப்பிதற்றுமவரார்
தனவுமொருமாயை யெங்கேயிருந்துவரும்
வன்மையொடிரக்கமெங்கே
ம்படைப்பதென் கர்த்தவியமெவ்விடம்
பூதபேதங்களெவிடம்
மெயிதமகிதமேல் வருநன்மைதீமையொடு
பொறைபொறுமையுமெவ்விடம்

எவர்சிறியரெவர்பெரிய ரெவருறவரெவர்பகைஞர்
யாதுமுனையன்றியுண்டோ
இகபரமிரண்டினு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

அன்னேயனேயெனுஞ் சிலசமயநின்னையே
யையாவவையாவென்னுமே
அலறிடுஞ்சிலசமய மல்லாதுபேய்போல
வலறியேயொன்றுமில்லாய்ப்
பின்னேதுமறியாம லொன்றைவிட்டொன்றைப்
பிதற்றிடுஞ்சிலசமயமேல்
பேசரியவொளியென்றும் வெளியென்றுநாதாதி
பிறவுமேநிலயமென்றும்
தன்னேரிலாததோ ரணுவென்றுமுவிதத்
தன்மையாங்காலமென்றுஞ்
சாற்றிடுஞ்சிலசமய மிவையாகிவேறதாய்ச்
சதாஞானவானந்தமாய்
என்னேயெனேகருணை விளையாட்டிருந்தவா
றெம்மனோர்புகலவெளிதோ
இகபரமிரண்டினு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

வேதமுடனாகம புராணமிதிகாசமுதல்
வேறுமுளகலைகளெல்லாம்
மிக்காகவத்துவித துவிதமார்க்கத்தையே
விரிவாயெடுத்துரைக்கும்
ஓதரியதுவிதமே யத்துவிதஞானத்தை
யுண்டுபண்ணுஞானமாகும்
ஊகமநுபவம்வசன மூன்றுக்குமொவ்வுமீ
துபயவாதிகள்சம்மதம்

னைக்கினிச் சரியையாதிகள்போதும்
ாதொன்றுபாவிக்கநான்
ாதலாலுன்னை நானென்றுபாவிக்கி
ாத்துவிதமார்க்கமுறலாம்
ாவித்திடினு மதுவாகிவந்தருள்செ
யங்கைநீகுறையுமுண்டோ
பிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யங்குநிறைகின்றபொருளே. (௫)

லானதிற்சற்றும் வாராதபிள்ளையைத்
தாட்டில்வைத்தாட்டியாட்டித்
டயினைக்கிள்ளல்போற் சங்கற்பமொன்றிற்
றுடுக்குத்தொடுத்தழிக்கும்
லாதவாதனை யெனுஞ்சப்தபூமியிடை
பாந்துதலைசுற்றியாடும்
ிலடங்காத பூவைபோற்றனே
றம்போந்துசஞ்சரிக்குங்
ாடுருப்புக்கு மிகவன்மைகாட்டிடுங்
ாணுதுகேட்டவெல்லாங்
தாக்காட்டியே யனுவாச்சுருக்கிடுங்
படநாடகசாலமோ
றும்வலத்த மனமாயையேயழியா
பன்றலடக்கவசமோ
பிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யங்குநிறைகின்றபொருளே. (௬)

ரநீர்மல்கி யுள்ளநெக்குருகாத
ள்ளனேனுறுவமோ
த்தாடியும் பாடியும்விடாமலே
ண்பணித்தாளைகாட்டி

அண்ணுபரஞ்சோதி யப்பாவுனக்கடிமை
யானெனவுமேலெழுந்த
அன்பாகிநாடக நடித்ததோகுற்றவில்லை
யகிலமுஞ்சிறிதறியுமேல்
தண்ணருநின்ன தரு ளறியாததல்லவே
சற்றேனுமினிதிரங்கிச்
சாசுவதமுத்திநிலை யீதென்றுணர்த்தியே
சகசநிலைதந்துவேறென்
றெண்ணுமலுள்ளபடி சுகமாயிருக்கவே
யேழையேற்கருள்செய்கண்டாய்
இகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

காகமானதுகோடி கூடுகின்றாலுமொரு
கல்லின்முன்னெதிர்நிற்குமோ
கர்மமானதுகோடி முன்னேசெய்தாலுநின்
கருணைப்ரவாகவருளைத்
தாகமாய்நாடினவை வாதிக்கவல்லதோ
தமியேற்கருட்டாகமோ
சற்றுமிலையென்பதுவும் வெளியாச்சுவினையெலா
சங்கேதமாய்க்கூடியே
தேகமானதைமிகவும் வாட்டுமேதுன்பங்கள்
சேராமல்யோகமார்க்க
சித்தியோவரவில்லை சகசநிஷ்டைக்குமென்
சிந்தைக்கும்வெகுதூரநான்
ஏகமாய்நின்னோ டிருக்குநாளெந்நா
ளிந்நாளின்முற்றுறுதோ
இகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

மமனதாகியே யல்லலறநின்னருளி
லொருவனுன்வந்திருக்கின்
ம்பொருதகேதா மாயாவிசித்ரமென
வாயுமோவிடமில்லையோ
நடையநின்னன்பர் சங்கைசெய்திடுவரோ
வலதுகிர்த்தியகர்த்தராய்
ம்படைத்தெம்மை யாள்கின்றபேர்சில
டாதென்பரோவகன்ற
மைபெறுபூரணங் குறையுமோபூதங்கள்
பய்க்கோலமாய்விதண்டை
மாவலதுதான் பரிபாககாலம்
றக்கவிலையோதொல்லையாம்
மசெறிசடவினை யெதிர்த்துவாய்பேசுமோ
வதுளவுசிறிதுபுகலாய்
மிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (எ)

ாதுதேகமெனு நினைவுண்டுதேகநிலை
நின்றிடவுமௌனியாகி
புபாயமொன் றருளினையையோவிதனை
நின்றனுட்டிக்கவென்றால்
தமனமோ வொடுங்கியுபாதிபெறக்
காணவிலையாகையாலே
யற்றுணும்புசிப் பொவ்வாதெநாளுமுன்
காட்சியிலிருந்துகொண்டு
ாளராயியம நியமாதிமேற்கொண்ட
மாதவர்க்கேவல்செய்து
நின்படிக்கெலாஞ் சித்திபெறலாஞானம்
வாய்க்குமொருமனுவெனக்கிங்

இல்லாமையொன்றினையு மில்லாமையாகவே
யிப்போதிரக்குகண்டாய்
இகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

மரவுரியுடுத்துமலை வனநெற்கொறித்துமுதிர்
வனசருகுவாயில்வந்தால்
வன்பசிதவிர்த்துமனல் வெயிலாதிமழையால்
வருந்தியும்மூலவனலைச்
சிரமளவெழுப்பியு நீரினிடைமூழ்கியுந்
தேககமதல்லவென்று
சிற்சுகவபேக்ஷையாய் நின்னன்பர்யோகஞ்
செலுத்தினார்யாம்பாவியேம்
விரவுமறுசுவையினொடு வேண்டுவபுசித்தணையில்
வேண்டுவவெலாமுடுத்தி
மேடைமாளிகையாதி வீட்டினிடைவைகியே
வேறொருவருத்தமின்றி
இரவுபகலேழையர்கள் சையோகமாயினோ
மெப்படிபிழைப்பதுரையாய்
இகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே.

முத்தனையமூரலும் பவளவாயின்சொலு
முகத்திலகுபசுமஞ்சளும்
மூர்ச்சிக்கவிரகசன் னதமேற்றவிருகும்ப
முலையின்மணிமாலைநால
வைத்தெமைமயக்கியிரு கண்வலையைவீசியே
மாயாவிலாசமோக
வாரிதியிலாழ்த்திடும் பாழானசிற்றிடை
மடந்தையர்கள்சிற்றின்பமோ

மகபோகம் புசித்துவிழியிமையாத
லென்னாட்டும்வந்ததென்றால்
ம்டமல்லவோ பேரின்பமுத்தியிப்
வியிலிருந்துகாண
நவிகாதம்வரு மென்றுசுகர்சென்றநெறி
வவுலகமறியாததோ
ம்டிரண்டினிலு முயிரினுக்குயிராகி
எங்குநிறைகின்றபொருளே. (கo)

லயுமென்னிலையு மொருநிலையெனக்கிடந்
மாறிடுமவத்தையாகி
ரன்காட்டாத வாணவமுமொளிகண்
டாளிக்கின்றவிருளென்னவே
மைகாட்டா தொருங்கவிருவினையினாற்
வுசுகதுக்கவேலை
யமுற்றுமில் லாமாயையதனாற்
டத்தகிலபேதமான
நிலையொழிந்திட வகண்டிதாகாரமாய்
றதறிவுமேலுதிப்ப
ஞெடுகீழ்மே னடுப்பக்கமென்னுமன்
றற்றுமானந்தநிறைவே
நிலைமையாய்நிற்க வியல்புகூரருள்வடிவ
மெந்நாளும்வாழிவாழி
மிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (கக)

ஆக பாடல் - ௬௧.

---